# லால் பாக் பூங்காவின் செல்ல ஆடு

டேவிட் மார்க்

தமிழில் கிருஷ்ணன்





# லால் பாக் பூங்காவின் செல்ல ஆடு

டேவிட் மார்க்

தமிழில் கிருஷ்ணன்

இந்தியாவில் ஒரு குட்டி நகரத்தில் ஒரு பெரிய பூங்கா இருந்ததாம். அதன் பெயர் தான் **லால் பாக்.**



அந்த ஊரின் சுற்று வட்டாரத்திலிருந்து உழைக்கும் மக்கள் அந்த பூங்காவிற்கு பொழுதை கழிக்கவும், ஓய்வெடுக்கவும் வந்தார்கள். இந்தியாவில் உழைப்புக்கு பஞ்சமே இல்லை. அதே போல விடுமுறை நாட்களுக்கும் பஞ்சமே இல்லை.

பல ஊர்களிலிருந்து நிறைய மக்கள் பூங்காவில் இருக்கும் வெள்ளை தாமரை மொட்டு விரிவதையும் மூடுவதையும் பார்ப்பதற்கென்றே வருவார்கள். ரப்பர் மரச்செடிகள், வளைந்து நிற்கும் செடிகள் என வித விதமான செடிகளை காண மக்கள் வந்தனர். அங்கிருந்த வாகை மரங்கள் அதில் பூத்திருந்த சிகப்பு நிற பூக்களோடு வானத்தை தொட்டு கொண்டிருந்தன. அங்கிருந்த நீரூற்றிலிருந்து தண்ணீர் தெளிப்பது வானவில்லை தெளிப்பது போன்று தோற்றமளித்தது.

ஒன்று மட்டும் நிச்சயம் எல்லோரும் தங்களுக்கு பிடித்த ஒரு விடயத்தை காண மறக்காமல் கூட்டமாய் வந்தனர். அது லால் பாக் பூங்காவை அழகு படுத்தும் ஒரு விடயமாகும்.

அது இப்போதிருக்கும் நவீன புல் அறுக்கும் இயந்திரம் போல விரைவாக புல்லை அருக்காது. அது நீங்கள் நினைப்பது போல ஒரு இயந்திரம் கிடையாது. அது ஒரு ஆடு. அதன் பெயர் **ரமேஷ்.**

ஒவ்வொரு நாள் காலையும் சூரியன் உதிக்கும் போது பூங்காவின் ஒரு மூலை -யிலிருந்து புல்லை மேய ஆரம்பிக்குமாம். அப்படியே குனிந்த தலை நிமிராமல் புல்லை பூமியோடு ஒட்ட அறுத்து தின்று விடுமாம்.





விடுமுறை நாட்களில் அது புல் தின்னும் பாணி ஒரு வித்தியாசமானது தான். மெல்ல பெரிய வட்டமாய் ஆரம்பித்து சுற்றி சுற்றி வட்டத்தின் நடுவில் வந்து முடிக்குமாம்.

சிறப்பு பண்டிகை நாட்களில் நடுவில் ஆரம்பித்து ஒவ்வொரு மூலைக்கும் புல்லை கடித்து கொண்டு செல்லுமாம். முடிவில் பார்த்தால் ஒரு நட்சத்திர வடிவை உருவாக்கி விடுமாம். இதை செய்வதில் ரமேஷுக்கு பெருமையாக இருந்தது.

இந்த சிறப்பு பண்டிகை நாட்களின் போது புல் மேயும் போது நிறைய தடைகள் இருந்து கொண்டே இருக்கும். ஆண்கள் வந்தால் ஆட்டின் பின்னால் தட்டி கொடுத்து அசட்டுச் சிரிப்புடன் “ரமேஷ்!” என்று அழைப்பார்கள். பெண்கள் வந்தால் தலையை தடவி கொடுத்து சிரித்தபடியே “ரமேஷ்!” என்று அழைப்பார்கள். குழந்தைகள் வந்தால் ஆட்டின் மேல் ஏறி சவாரி போவார்கள். போகும் போது ஒரே சிரிப்பும் கும்மாளமும் தான். அப்படியே ரமேஷ்! என்று கத்தி கொண்டே வருவார்கள்.



ரமேஷ்!

ரமேஷ்!

ரமேஷ்!



பூங்காவிற்கு ஒரு விவசாய குடும்பம் அடிக்கடி வருவார்கள். அது ராஜேந்திராவின் குடும்பம். அவருடைய மனைவியின் பெயர் கமலா, மகனின் பெயர் கிருஷ்ணா. அவர்கள் விவசாயம் செய்து வந்தார்கள். இப்போது நிலத்தை இழந்து பிழைப்பதற்கு நகரத்திற்கு வந்து விட்டனர். எப்போது லால் பாக் பூங்கா வந்தாலும் அவர்களுக்கு அது அவர்களுடைய கிராமத்தை நினைவூட்டியது. ரமேஷ் அவர்களுக்கு தங்களது பண்ணையை நினைவூட்டினான். பூங்கா அவர்களுக்கு ஒருவிதமான மன அமைதி கொடுத்தது. ரமேஷ் ! ரமேஷ்! என்று கூப்பிடும் போது இன்னும் மகிழ்ச்சியடைந்தார்கள்.

அந்த ஊரின் மேயருக்கு என்னவோ ஆடு புல் வெட்டுவதில் ஒரு திருப்தி இல்லை. அதனால் பூங்கா மேலாளரை அழைத்தார்.
“புல்லை அறுப்பதற்கு ஒரு இயந்திரத்தை வாங்கினால் என்ன? “ என்று கேட்டார்.

அது மிகவும் விலை உயர்ந்தது என்றார் பூங்கா மேலாளர்.
மக்கள் தங்கள் நகரத்தை நினைத்து பெருமை கொள்கிறார்கள், அவர்கள் நன்கொடை கொடுப்பார்கள் என்றார் மேயர்.



மக்கள் நன்கொடையை வாரி கொடுத்தார்கள். ராஜேந்திராவின் குடும்பமும் தான். கிருஷ்ணாவும் தான் சேர்த்து வைத்திருந்த சில்லறைகளை நன்கொடையாக கொடுத்தான்.

தங்கள் நகரத்தை அழகாக வைப்பதற்காக அவர்கள் நன்கொடை கொடுப்பதை மதிப்பாக கருதினார்கள். அப்போது அந்த இயந்திரம் ரமேஷின் வேலையை பறிக்க போவதென்று அவர்கள் அறியவில்லை .

ரமேஷ் முதல்  முறையாக புல் வெட்டும்
இயந்திரத்தை பார்த்த வுடன் மனம்
நொந்து போனது. தலையை திருப்பி
கொண்டு அப்படியே பூங்காவை விட்டு
வெளியே வந்து மலையை நோக்கி
சென்று மறைந்தது.



ரமேஷ் மலையில் வந்து ஒரு ஆட்டு மந்தையுடன் சேர்ந்து கொண்டது. மற்ற ஆடுகளுக்கு ஏன் ரமேஷ் வட்ட வடிவிலும், நட்சத்திர வடிவிலும் புல்லை தின்று கொண்டிருக்கிறான் என்று புரிய வில்லை. அவ்வப்போது ஏன் அதன் பெரிய கண்களில் சோகமாய் ஏக்கத்துடன் தலையை நீட்டி மலையின் கீழ் பார்க்கிறான் என்றும் அவைகளுக்கு புரியவில்லை. அந்த ஆடுகள் புல்வெளியில் மேய்ந்தன ரமேஷை தொந்தரவு செய்யவில்லை.

அடுத்த விடுமுறையில் ராஜேந்திராவின் குடும்பமும், நிறைய மக்களும் எப்போதும் போல பூங்காவிற்கு வந்தனர். வெள்ளை தாமரைகளை  பார்த்து மகிழ்ந்தனர். செடி கொடிகளை பார்த்து மகிழ்ந்தனர். நீரூற்று தண்ணீர், வாகை மரத்தின் சிகப்பு பூக்கள் எல்லாவற்றையும் பார்த்து ரசித்தனர். ஆனால் புல் வெளிக்கு சென்ற போது ரமேஷை காணவில்லை. அதற்கு பதில் அங்கு ஒரு இயந்திரம் நின்று கொண்டிருந்தது.



இயந்திரத்தை தட்டி கொடுக்க முடியுமா? தலையை வருடி கொடுக்க தான் முடியுமா? இயந்திரத்தின் மேல் ஏறி சவாரி தான் செய்ய முடியுமா? மக்கள் கொஞ்சம் கொஞ்சமாக வருவதை நிறுத்தி கொண்டனர். வேலைநாட்களிலும் சரி, விடுமுறை நாட்களிலும் சரி சிறிது காலத்தில் மக்கள் வருவது முற்றுமாக நின்றுவிட்டது.





மேயர் பூங்கா மேலாளரை அழைத்தார்.
மக்கள் எங்கே போயினர்? என்று கத்தினார்.
ரமேஷ் போன பிறகு இப்போது யாரும் வருவதில்லை
என்று கூறினார் மேலாளர். அந்த ஆட்டை
கண்டுபிடித்து கொண்டு வரவேண்டும்
என்று கர்ஜித்தார் மேயர்.

ரமேஷை கண்டுபிடிக்க ஒரு குழு அமைத்தார்கள். ஆனால் அந்த குழுவால் ரமேஷை கண்டுபிடிக்க முடியவில்லை. அவர்களுக்கு ஆடுகளில் வித்தியாசம் கண்டுபிடிக்க முடியவில்லை.

பின் ராஜேந்திரா,கமலா, கிருஷ்ணா மூவரும் ரமேஷை கண்டு பிடிக்க மலை மேல் ஏறி சென்றனர். ராஜேந்திரா ரமேஷின் கம்பிளி போன்ற தோளை பார்த்தால் கண்டுபிடித்துவிட முடியும் என்று நினைத்தார். கமலா ரமேஷின் கருணை மிகுந்த கண்களை தான் பார்த்தால் கண்டு பிடித்து விட முடியும் என்று நினைத்தாள். ஆனால் அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவர்களின் மகன் கிருஷ்ணா ஒரு ஆடு மட்டும் தனியாக மேய்ந்து கொண்டிருப்பதை கவனித்தான். மேலும் வட்ட வடிவில் ஆல மரத்தை சுற்றி சுற்றி அது புல்லை தின்று கொண்டிருப்பதையும் பார்த்தான்.





ரமேஷ்! என்று கத்தினான். ஆட்டின் மேல் ஏறி
கொண்டான். ஓடு ரமேஷ் ஓடு! என்றான் அப்படி தான்
ரமேஷ் லால் பாக் பூங்காவிற்கு திரும்பி வந்தான்.

இப்போது விடுமுறை நாட்களை தவிர எல்லா நாட்களிலும் புல் வெட்டும் இயந்திரம் நேராகவும், வேகமாகவும் புல்வெளியை வெட்டுவதை பார்க்க முடியும். ஆம் அந்த நகர மக்கள் அவர்கள் வேலை செய்யும் நாட்களில் பார்க்க முடியாது தான். ஆனால் பூங்கா பராமரிப்பு சீராக நடப்பதில் அவர்கள் கொடுத்த நன்கொடை வீண் போகவில்லை என்பதில் மகிழ்ச்சியே.

ரமேஷ் மட்டுமே அந்த இயந்திரம் வேலை செய்வதை தினமும் பார்க்க நேரிடும். ஆனால் முன்பு போல் மனம் நொந்து போவதுமில்லை. புல் வெளியில் தலையை கோபத்தில் முட்டி கொள்வதும் இல்லை. ஏனென்றால் விடுமுறை நாட்களில் ரமேஷ் தான் அந்த புல்வெளியை வெட்டும் இயந்திரம்.

இப்போது ராஜேந்திரா போன்ற ஆண்கள் தன் முதுகை தட்டி கொடுத்த நேரம் போக, கமலா போன்ற பெண்கள் தன் முகத்தில் வருடிய நேரம் போக, கிருஷ்ணா போன்ற குழந்தைகள் அதன் மீது ஏறி சவாரி செய்யும் நேரம் போக மீதி நேரத்தில் நீரூற்று உண்டாக்கும் வானவில் மற்றும் சிகப்பு பூக்கள் பூத்திருக்கும் வாகை மரத்தின் நடுவில் இருக்கும் புல்வெளியை ரமேஷ் வட்டமாகவும், நட்சத்திர வடிவிலும் மேய்ந்து அழகு படுத்தியது.



